| | | ஸ்தானங்கள் | சுழிகள் |
|---|---|---|---|
| 1. | கடைவாய்கள் | 2 | 2 |
| 2. | நெற்றி | 4 | 12 |
| 3. | புருவங்களின் நடு | 1 | 1 |
| 4. | அடிக்காதுகள் | 2 | 2 |
| 5. | தொண்டைக்குழி | 1 | 1 |
| 6. | கழுத்து | 1 | 1 |
| 7. | மேல்நெற்றி | 2 | 2 |
| 8. | மார்பு | 3 | 12 |
| 9. | முன்கால் துடைகள் | 2 | 2 |
| 10. | மூத்திரகோசம் | 2 | 2 |
| | ஆக ஸ்தானங்கள் | 20-க்கு | சுழிகள் 37 |

இவைகளில் நெற்றியில் நான்கு இடங்களில் 12 சுழிகளிருக்கும். அவைகளாவன :—"யமம் ( : ), த்ரேதா ( ∴ ), நிச்ரேணிகா ( ⋮ ), சதுரங்கம் ( ⁘ ).

மார்பில் கூறப்பட்ட மூன்றிடங்களில் ஓரிடத்தில் ஐந்து சுழிகளிருக்கும். அதற்கு "ஸ்ரீவிருக்ஷம்" என்று பெயர். மற்றோரிடத்தில் நான்கு சுழிகளும், வேறோரிடத்தில் மூன்று சுழிகளும் இருக்கும். மேல் நெற்றியில் இரு இடங்களில் உள்ள சுழிகள் சிப்பிவடிவமாக இருக்கும்.

**அசுபாவர்த்தஸ்தானங்கள் 76-ம், சுபாவர்த்தஸ்தானங்கள் 76-ம் :**

| | | ஸ்தானங்கள் | ஆவர்த்தங்கள் |
|---|---|---|---|
| 1. | கண்டம் | 2 | 2 |
| 2. | நெற்றிப்பொட்டுகள் | 2 | 2 |
| 3. | மென்னி | 2 | 2 |

| | ஸ்தானங்கள் | ஆவர்த்தங்கள் |
|---|---|---|
| 4. கண்களின் கீழ்த்தடம் | 2 | 2 |
| 5. மூக்கின் ஓட்டைகள் | 2 | 2 |
| 6. தோள்ப்பட்டைகள் | 2 | 2 |
| 7. முழங்கால்கள் | 2 | 2 |
| 8. பிருஷ்டபாகத்தின் மேடுகள் | 2 | 2 |
| 9. ஆஸனத்வாரம் | 2 | 2 |
| 10. அண்டகோசம் | 2 | 2 |
| 11. கன்னங்கள் | 2 | 2 |
| 12. காதுநுனிகள் | 2 | 2 |
| 13. வயிறு | 2 | 2 |
| 14. சப்பையின் கீழ்புறம் | 2 | 2 |
| 15. மூத்திரகோசம் | 2 | 2 |
| 16. தாடைகள் | 2 | 2 |
| 17. வஹங்கள் | 2 | 2 |
| 18. விது | 2 | 2 |
| 19. கமுக்கட்டைகள் (முன்கால்களிலுள்ளவை) | 2 | 2 |
| 20. துடைகள் (பின்கால்களிலுள்ளவை) | 2 | 2 |
| 21. பக்கங்கள் | 2 | 2 |
| 22. அடிவால் | 2 | 2 |
| 23. இரு புருவங்கள் | 2 | 2 |
| 24. முதுகு | 1 | 1 |
| 25. களம் (தொண்டை—கீழ்தடு கழுத்துக்களின் மத்திய தேசம்) | 1 | 1 |
| 26. கொண்டை | 1 | 1 |

| | ஸ்தானங்கள் | ஆவர்த்தங்கள் |
|---|---|---|
| 27. மேலுதடு | 1 | 1 |
| 28. நடுமுதுகு | 1 | 1 |
| 29. மூக்கோட்டைகளின் கீழே நடுபாகம் | 1 | 1 |
| 30. மூக்குத்தண்டு | 1 | 1 |
| 31. தொப்புள் | 1 | 1 |
| 32. இதயம் (மார்க்குழி) | 1 | 1 |
| 33. மார்க்கூடு | 1 | 1 |
| 34. ஸீவனீ | 1 | 1 |
| 35. மேலுதடு (மேலுதட்டின் நடுக்குழி) | 1 | 1 |
| 36. காகஸம் | 1 | 1 |
| 37. அபானம் | 1 | 1 |
| 38. கணைக்கால்கள் | 4 | 4 |
| 39. கணுக்கால்கள் | 4 | 4 |
| 40. கணுக்கால் குளம்புகளின் நடுபாகங்கள் | 4 | 4 |
| 41. கண்டைக்கால்கள் | 4 | 4 |
| ஆக இடங்கள் | 76க்கு சுழிகள் | 76 |

இந்த எழுபத்தாறு (76) சுழிகளும் அசுபாவர்த்தங்களாம்.

இந்த ஆவர்த்தங்களுள்ள குதிரைகள்—ஏற்றவனுக்கு மிகவும் தீமை விளைவிக்கக் கூடியவை. ஆகவே இவற்றை விலக்கவேண்டும்.

## ஆவர்த்தங்கள் (தொடர்ச்சி)

குதிரைகளுக்கு சுபாவர்த்தம் அசுபாவர்த்தம் இரண்டும் காணப்பட்டால், அவைகளில் ஒன்றுக்கு பலனில்லை. எனவே கெட்ட சுழியை, தங்கத்தைக் காய்ச்சி பொசுக்கிவிடவேண்டும். (சிறு தோஷங்களை உதாஸீனம் செய்து) அவைகளை விலை கொடுத்து வாங்கிவிடலாம். ஆயினும் கொண்டைச்சுழி மட்டிலும் மிகக் கொடியதுதான்.

குதிரைகளின் மூக்கின்கீழ் வாயு பகவானும், நெற்றியில் அக்னி பகவானும், மார்பில் அசுவினீ தேவர்களும், சிரஸில் சந்திர ஸூரியர்களும், நாசித் துவாரங்களில் ஸ்கந்தரும் விசாகரும், உபரந்திரத்தில் விஷ்ணுவும் பரமேசுவரனும் இருக்கிறார்கள். ஆகையால் இந்த ஆறு இடங்களில் இருக்கும் பத்துச் சுழிகளும் மிகப் பெருமையானவைகளாகக் கூறப்பட்டிருக்கின்றன. இந்த பத்து சுழிகளில் ஒன்று இல்லாவிட்டாலும் அக் குதிரையை விலக்கத்தான் வேண்டும்.

## சித்திரவர்ணக் குதிரைகள்

முழு சரீரத்தின் நிறம், முகம், கண்கள், தோல், அண்டம், ஆண்குறி, குளம்புகள் எல்லாம் வெண்மையாய், சங்கம், சிங்கம், யானைகளைப்போல் கம்பீரமான சப்தமுடையதாய், கவர்ச்சிகரமான அங்க அமைப்பு, நல்ல சுழிகள், நல்ல லக்ஷணங்கள், ஒளி, அழகியநடைகளுடன் சக்திவாய்ந்த உத்தமாசுவம் ராஜ்யத்திலிருந்தால் ஸகல ஸௌக்கியங்களையும் கொடுக்கும்.

குதிரையின் உடலில் வெண்மை கீழ்க்கண்ட இடங்களில் இருந்தால் அந்தந்த பயன்களை அளிக்கும்.

| | | |
|---|---|---|
| அடிவயிறு | — | பிள்ளைகள். |
| மேல்வயிறு | — | சந்தோஷம். |
| கழுத்து | — | செல்வம். |
| முதுகு | — | சௌபாக்கியம். |
| இடது பக்கம் | — | செல்வம். |
| வலது பக்கம் | — | மனைவி. |
| மார்பு | — | சௌக்யம். |
| முகம் | — | வெற்றி. |

குதிரை :

சிகப்பு அல்லது கருப்பாயும், அதன் காதுகள், குளம்புகள், முகம், கால்கள் இவை வெளுப்பாக இருந்தாலும்,

பழுத்த நாவற்பழ நிறம், காக்கைநிற முள்ளதாக இருந்தாலும்.

முகம், தலை, மார்பு, வால், நான்கு கால்கள், ஆகிய எட்டு இடங்களும் வெளுப்பாக இருந்தாலும்,

உடம்பு முழுமையும் நீலம், மஞ்சள், வெளுப்பு, சிகப்பு, கலப்பு நிறமான வட்டங்கள் நிரம்பி யிருந்தாலும்,

உடல் முழுமையும் கருப்பு நிறமாயும், நடு உடல் மட்டும் சிகப்பாயு மிருந்தாலும், (இதற்கு "ஸந்நத் தம்" என்று பெயர்.)

பழுப்பு அல்லது கருப்பு நிறமான குதிரைக்கு வயிறு வெளுப்பாக இருந்தாலும் சிகப்பாக இருந் தாலும்,

இடுப்பில் மட்டும் வெள்ளைத்துணி உடுத்தினுப் போல வெளுப்பாக இருந்தாலும் (இதற்கு "ஸம்வீதி" என்று பெயர்.)

உடல் சிகப்பாகவும், முகம், முதுகு, வால் இவைகள் வெளுப்பாக இருந்தாலும்,

தலை, கண்கள், காதுகள் இவைகள் உள்பட்ட இடம் வெளுப்பாக இருந்தாலும்,

உடல் முழுமையும் வெளுப்பாகவும், தலைமட்டும் அதிக வெளுப்பாகவும் இருந்தாலும்,

உடல் முழுதும் பல வர்ணங்களால் ஆன வட்டங்கள் நிரம்பியிருந்தாலும் (இதற்கு "நாகஜாதீயம்" என்று பெயர்.)

நிறம் கருப்பாயும், மார்பு, முகம், குளம்பு, கொண்டை மயிர், பிடரிமயிர், கண், முதுகு இவைகள் வெளுப்பாகவும் இருந்தாலும், (இதற்கு "ஜ்யோதிஷ்மான்" எனப்பெயர்.)

குளம்புகள் மயிர்கள்ால் மறைக்கப்பட்டிருந்தாலும் நான்கு குளம்புகள், முகம் ஆகிய ஐந்திடங்களில் வெண்மை இருந்தாலும் (இதற்கு "பஞ்சபத்திரகம்" எனப்பெயர்.)

குதிரையின் ஸர்வாங்கங்களும் ஒரே நிறமாயிருந்தாலும், அந்நிறம் அழுததமாயும் ஒளிமிக்கதாயுமிருந்தாலும் (அது, அரசர்களுக்கு மிகவும் நன்மை பயக்கும்.)

தொப்புள்வரையிலுள்ள முன்பாகம் சிகப்பாகவும், மற்ற பின்பாகம் வெண்மையாகவுமிருந்து, நல்ல கட்டமைப்பான உடல், வலிமை, சோபை, களையுள்ளதாக இருந்தாலும் (இதற்கு "திவாவைஜயிகம்" என்று பெயர். இது ராஜ்யாபிவிருத்தியை யுண்டு பண்ணும்.)

இவ்விதம் முன்பாதி வெளுப்பாகவும், பின்பாதி சிகப்பாகவும், நல்ல உடல், வலிமை, காந்தி பொருந்தியவைகளால் இருந்தாலும் '(இதற்கு "நிசாவைஜயிகம்" என்று பெயர். இது எப்பொழுதும், அரசனுக்கு ராஜ்யம், புகழ், செல்வம், ஸௌக்கியம் இவைகளையும், வம்சாபிவிருத்தியையும் கொடுக்கும்.)

ஒரு பாதி கருப்பாயும், மற்ருெரு பாதி வெளுப்பாயுமிருந்தாலும்,

கெடுதலான சுழிகளிருப்பினும், அதன் காலும் முகமும், வெளுப்பாக இருந்தாலும், வண்டுநிறமாயிருந்து, அதன் தாடை, கருப்பா(மிகக்கருப்பா)யிருந்தாலும்,

அது உடையவனுக்கு நல்ல பலனைக் கொடுக்கும்

குளம்பு கருப்பாயும், கால் வெளுப்பாயுமிருக்கும் குதிரை நல்லதன்று. அது அரசனுக்குக் கேடு விளைவிக்கும்.

நான்கு கால்களில் இரண்டு கால்கள் மட்டிலும் வெளுப்பாயிருந்தால், படை பிராணன், இவை களுக்கு அழிவையுண்டுபண்ணும்.

மார்பு, நெற்றி, பிருஷ்டம் இம்மூன்றிடங்களும் பருமனும், முதுகு, காது, குளம்பு இம்மூன்றும் குட்டையாகவும், உடம்பு மயிர், வால் மயிர், பிடரி மயிர்கள் மிருதுவாயும், முகம், கண், தலை இவை மூன்றும் பெரியதாயும், உதடு, நாக்கு, கடைவாய் இம் மூன்றும் மெல்லியதாயும், முகம், கழுத்து, கணுக்கால், இம்மூன்றும் நீளமாயும் இருந்து, முழுவெண்மைநிற முள்ள குதிரை சுகம், ராஜ்யம், செல்வம் இவைகளைக் கொடுக்கும்.

## குதிரை நிறமும் அதன் பயனும்

சந்திரன், தேனீ, பனி, அன்னம், முத்து, உருக்குத் தங்கம், தாமரைக்கேஸரம், மலர்ந்த ஆம்பல், புரசம்பூ, கிளி, நீலமலர், இந்திரநீலரத்தி னம், யானை, வண்டு, குயில், நீருண்டமேகம், வேம்பு, அல்லது காக்கை, உதயசூரியன், அசோகப்பூங் கொத்து, செந்தாமரைமலர், சுத்தப்படுத்திய அரக்கு, அல்லது செம்பஞ்சுக்குழம்பு, இவைகளின் நிறமுடைய தாய், நீண்ட கழுத்து, அழகிய விலாப்புறமுடைய தாய், கண், இடுப்பு, தோள்பட்டை, மார்பு, நெற்றி

இவைகள் பருத்து, முதுகு, அண்டம், காது இவைகள் சிறுத்து, கழுதைக்குளம்புபோலழுத்தமான குளம்பு, சதைப்பற்றில்லாத முழங்கால், மெல்லிய ரோமங்கள், மிருதுவாய் மெல்லியதான, நாக்கு, கடைவாய், உதடு, மூக்கின் கீழ்பாகங்கள், நெருங்கி, வெண்மையாய். அழகாயமைந்த பற்கள், நல்ல சோபை, நல்ல வலிமை, நல்ல சுழி, நல்ல அழகு, இத்தகைய மற்றும் பல நல்ல லக்ஷணங்கள், கண்ணையும் மனதையும் கவரும் நிறம் இவைகளையுடைய குதிரைகள், ராஜ்யத்திற்கே தைரியத்தையுண்டுபண்ணக்கூடியவைகளாம். குதிரை தங்கநிறமானல் ஸம்பத்தையும், சந்திரநிறமானல் சத்துருநாசத்தையும், காயாம்பூநிறமானல் ஜயத்தையும், வெண்சிகப்பு நிறமானல், மனைவி, புத்திரன், கோசவிருத்தி இவைகளையும், ஏலக்கொடி நிறமாயின் ஜயத்தையும், ஸாரஸபக்ஷி நிறமாயிருந்தால், அளவற்ற செல்வத்தையும் கொடுக்கும். ஸாமானிய நிலையிலுள்ளவனுக்கும் தொடர்ச்சியாய் வெற்றியைக் கொடுக்கும்.

கோழி, கிரௌஞ்சம் இவைகளின் நிறமுள்ள குதிரையையுடைய அரசன் போரில் பகைவனை வெற்றிபெறுவான்.

கெட்டது :

உதட்டின் மேல்பாகம், அண்டம், குளம்பு, வால், தலை, கண், ஆண்குறி இந்த ஏழு இடங்களும், கருப்பாயும் மற்ற இடங்கள் வெண்மையாகவுமிருக்கும் குதிரை பொக்கிஷத்தை நாசம் செய்துவிடும். ஆகையால் இத்தகைய குதிரையை நீக்கிவிடவேண்டும்.

கீழ்க்கூறிய ஏழு இடங்களும் வெளுப்பாகவும், மற்ற அங்கங்கள் யாவும் வேறு நிறமாயுமிருந்தால், அக்குதிரை மேன்மையானதாம். இது பகைவன் பக்கத்தை யழித்து, நண்பர்களேயும் பொக்கிஷத்தை யும் வளர்க்கவல்லது.

தணல், பனம்பழம், நரி, பன்றி, மாடப்புரு, மேகம், பெருச்சாளி, காக்கை, கோவைக்கனி, புகை, செந்நாய், கோட்டான் இவற்றின் நிறமுள்ள குதிரைகள், யஜமானனுக்கு நோயைக் கொடுக்கும்.

குதிரை, வெண்மை, வெண்சிகப்பு, மஞ்சள், வெண்மஞ்சள், நிறமாயும், அதன் மேலுதட்டின் மேல்பாகம், கண், அண்டம், குளம்பு, வால், கருப்பா கவுமிருந்தால், இத்தகைய குதிரையை வைத்திருப்பவ னுடைய, பொக்கிஷமும், ராஜ்யமும் சிதைந்துபோம்.

குதிரை, வெளுப்பாகவோ, சிகப்பாகவோ இருந்து, அதன் ஒருகால் சிகப்பாகவோ, கருப்பா கவோ இருந்தால், அது யஜமானனேச் சண்டையிற் கொன்றுவிடும்.

குதிரை சிகப்பாகவும், அதன் நடுபாகம், கால் இவை கருப்பாகவுமிருந்தால், அதுவும் சண்டையில் யஜமானனேக் கொன்றுவிடும்.

## புண்டிரலக்ஷணங்களும் பலன்களும்

மேலுதட்டிற்குமேல், காதுகளுக்குக்கீழ் மூக்குத் தண்டு நெற்றிகளில், வெண்மையாகவோ காணப் படும் அடையாளத்திற்கு "நெற்றிச்சுட்டி" (புண்டி ரம்) என்று பெயர். அமைப்பைப் பொருத்து அதன் பலன் கூறப்பட்டிருக்கிறது.

தாமரையிதழ், கலசம், கலப்பை, உலக்கை, (கொடி) கொடிமரம், கண்டரக்கோடரி, கண்ணடி, ஸ்ரீவிருக்ஷம், சங்கு, குடை, ஸ்வஸ்திகம், குண்டிகை, வச்சிராயுதம், சாமரம், ஆமை, எட்டுக்கால்பூச்சி, ஓமகுண்டம், கத்தி, சதுரச்ரம், இவைகளைப்போன்ற நெற்றிச்சுட்டியுள்ள குதிரைகள், யஜமானனுக்கு ஜயம், செல்வம், பிள்ளைப்பேறு இவைகளைக் கொடுக்கும்.

நெற்றியிலுள்ள சுட்டி, சதுரமாயிருந்தாலும், கத்தியைப்போலிருந்தாலும், முகம் முழுமையும் வெண்மையாயிருந்தாலும், அக்குதிரை மிகச்செல்வ மானது.

சுட்டிகள் குறுக்காக இருந்தால் அவை செல்வத்தைச் சிதைக்கும். கருப்பாயிருந்தால் பற்பல இக்கட்டுகளையுண்டுபண்ணும். ஒரு புறத்திலோ இரு புறங்களிலுமோ சூலம் போலிருந்தால் துக்கத்தை யுண்டாக்கும்., பாசம், சங்கிலி இவைகளைப்போலிருந் தால், கட்டுண்டு கிடக்கச்செய்யும்.

மேலுதடு, அதன்மேற்புறம், இடப்பக்கம், கழுத்து, நெஞ்சாங்குழி இவைகளில் சுட்டியிருந்தால்,

அக்குதிரை கேடு விளைவிக்கும். ஆகையால் அவைகளை நீக்கிவிடவேண்டும்.

சுட்டி நாக்கைப்போலிருந்தாலும், கருப்பு நிறமாகவோ, பயங்கரமாகவோ, பல நிறங்களுடையதாகவோ, மெல்லியதாகவோ இருந்தாலும், மஞ்சள், சிகப்பு, கருப்பு நிறங்களாக இருந்தாலும், அவைகள் நல்லவையல்ல.

குதிரையின் நெற்றியிலிருக்கும் நக்ஷத்திரம் போன்ற பொட்டுக்கு "லலாமம்" என்று பெயர். அதன் அமைப்பைப்பொருத்து அதன் பலன் கூறப்பட்டிருக்கிறது. (லலாமம்—பொட்டு.)

சந்திரன், சூரியன், பிறைச்சந்திரன், நக்ஷத்திரம் இவைகளைப்போன்ற பொட்டுள்ள குதிரையை வைத்திருப்பவன் அரசனாவான்.

அந்த நெற்றிப்பொட்டானது, நகராவைப் போலாவது, காக்கையின் கால்போல் விசித்திரமாகவாவது, நெற்றிக்குக்கீழ் இடது பக்கத்திலாவது இருந்தால், அது நலங்களை யழித்துவிடும்.

ஒரேவிதமான நிறமுள்ள குதிரைக்கு, தலை, கண், காது, மயிர், (கொண்டை, பிடரிமயிர்.) இடது கால்கள், வயிறு, முகம் இவைகளில் வேறு நிறம் காணப்பட்டால், அதுவும் ஒரு சுட்டியாகும். அத்தகைய குதிரைமீதேறிய அரசன் சண்டையில் பகைவர்களை வெல்லுவான்.

ஒரே நிறமுள்ள குதிரைக்கு காது, நெற்றி, மூக்கின் நுனி, தலை, கொண்டை, பிடரி, புருவம், காதின் நுனி, மூக்கோட்டைகளின் நடு, மாணியின் நுனி, வால் இந்த இடங்கள் வேறு நிறமாயிருந்தால், அக்குதிரை பயத்தைக் கொடுக்கும். அத்தகைய குதிரையிலேறி போருக்குச் சென்றவன், அபஜய மடைந்து திரும்புவான்.

(இந்த அத்தியாயம் கர்கர் எழுதிய கணக்கிரந்தத்திலிருந்து தொகுக்கப்பட்டிருக்கிறது.)

## புஷ்ப லட்சணம்

---

குதிரைகளின் உடம்பில் புதிதாய்த் தோன்றும் நிறவேற்றுமைக்கு "புஷ்பம்" என்று பெயர். அது நல்லது கெட்டது என இருவகையானது. இடவேறு பாட்டினுல் அவைகளுக்கு முடிவாகக் கூறப்பட்டிருக்கும் லட்சணமே, இங்கு சுருக்கமாய் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது.

நெற்றி, மேலுதடு, கழுத்து, தலை, காது, தொண்டை, கொண்டைமயிர்நுனி, இவைகளில் புஷ்பமிருக்கும் குதிரை மிகவும் நல்லது.

தோள், மார்பு, கக்கம், விதை, முன்கால், முகம், தாழ்வாய்க்கட்டை, முதுகு இவைகளில் புஷ்பமிருக்கும் குதிரை, தலைவனுக்கு நன்மைகளை யுண்டு பண்ணும்.

தொப்புள், கழுத்து, பற்கள் இவைகளில் புஷ்பமுள்ள குதிரை நல்லது.

கீழுதடு, இடுப்பு, மூக்கோட்டைகளின் நடு, மேலுதட்டிற்கு மேல்பாகம், மூக்குத்தண்டு, அண்டங்கள், நெற்றிப்பொட்டு, புருவங்கள், கழுத்து, புஜம், (முன்கால் மேல்பாகம்), கடைவாய், அடிவயிறு, பிருஷ்டபாகத்தின் மேடு, குதம், மார்பு இவ்விடங்களில் புஷ்பமுள்ள குதிரைகள் கெட்டவைகள்.

புஷ்பங்கள், சிகப்பு, மஞ்சள், கருப்பு நிறமாயிருந்தால், அக்குதிரை விரும்பத்தக்கதல்ல.

அவை நல்ல இடங்களிலிருந்தால், அக்குதிரை ஸாதாரணமாம். (நல்லதுமில்லை, கெட்டதுமில்லை).

உடம்பு முழுமையும் புஷ்பங்களிருந்தால், அக்குதிரையை ஒரு வருஷகாலத்திற்கு விலக்கிவைக்க வேண்டும்.

**புஷ்பங்களுண்டாகும் நல்ல இடங்களும் பலன்களும்**

| | | |
|---|---|---|
| நெற்றி | — | பொருள். |
| தொண்டை | — | அன்னபானம். |
| இடது காது | — | புத்திரர்கள். |
| குளம்பு | — | நண்பர்கள். |
| மார்பு, தோள் | — | சேனைத்தலைமை. |
| ஆண்குறி | — | புத்திரர்கள். |
| விலாப்புறம் | — | நண்பர்கள். |
| கடைவாய் | — | அன்னபானம். |
| நாஸாதுவாரம் | — | பொருள். |
| கண்டம் | — | புத்திரர்கள். |
| பிடரியின் இரு கோடிகள் | — | மித்திரர்கள். |
| அண்டம், தோள் | — | புத்திரர்கள், மேன்மை, |

இவ்விதம் சுபாசுபங்களுக்கேற்ப புஷ்ப பலன்கள் கூறப்பட்டிருக்கின்றன.

ஸர்வாங்கங்களிலும் வெண்மையான புஷ்பங்களுள்ள குதிரை, மேன்மையானதாம்.

குதிரை எந்த நிறமானாலும் புஷ்பம் வெண்மையாயிருப்பது நல்லது. குதிரை, சிகப்பு அல்லது மஞ்சள் நிறமானால், புஷ்பம் சிகப்பாயிருப்பது நல்லதாம்.

### கெட்ட இடங்களில் புஷ்ப பலன்

| | | |
|---|---|---|
| வயிறு, கழுத்து, பொட்டு | — | பசி |
| வயிறு, கக்கம் (முன்புறம்) | — | மரணபயம். |
| கொண்டை, அதன் கீழ்பாகம், பிருஷ்ட பாகம், பிடரி, கண்ணின் கீழ்பாகம் | — | பகைமை. |
| கணுக்கால் | — | வழியில் தொல்லை. |
| அபானம், அடிவால் | — | சொத்துநாசம். |
| முழங்கால்த்தண்டு | — | ஆயுதங்களுக்கு இலக்காகுதல். |
| முன்கால் | — | புத்திரநாசம். |
| பின்கணுக்கால் | — | அபஜயம். |
| கன்னம் | — | சரீரநாசம். |

வெள்ளைநிறமான குதிரைக்கு, சிகப்பு, மஞ்சள், கருப்புநிறமான ஒளிமிக்க புஷ்பங்களிருப்பின், அவை மேன்மையானவையாம்.

குதிரை எந்த நிறமானாலும், புஷ்பம் கருப்பாயிருந்தால் அது சிறைவாசத்தையும், மரண தண்டனையையும் கொடுக்கும்.

முன்பற்கள் உதடுகளில், வெண்மையான புஷ்பங்களிருந்தால், அவைகள் ஏழு நாட்கள் அல்லது ஏழு மாதங்களில் செல்வத்தைக் கொடுக்கும்.

(புண்டிராத்தியாயம், புஷ்பாத்தியாயம்—இவை இரண்டும் கர்கமுனிவர் செய்த கணக்கிரந்தத்திலிருந்து தொகுக்கப்பட்டவை. இவற்றுடன் சாலிஹோத்திரர் சொல்லும் ஆவர்த்தங்களைச் சேர்த்துப் பார்க்கும்பொழுது, சாலிஹோத்திரர் சொல்லும் ஆவர்த்தங்களைத்தான் புண்டிரம் என்றும் புஷ்பம் என்றும் கர்கமுனிவர் குறிப்பிடுகிறார் என்று தோன்றுகிறது. ஆனால் சிலவற்றிற்குப் பயன் கூறும்பொழுது சாலிஹோத்திரருக்கும் கர்கருக்கும் அபிப்பிராய பேதம் தெரிவதால் அனுபவஸ்தர்கள் தான் இவற்றின் உண்மைகளை விளகக முடியும்.)

## குதிரை கனைப்பின் பலன்

பூரணபாத்திரம், பிராமணன், புஷ்பம், தயிர், இவைகளைக் கண்டு குதிரை கனைத்தால் நன்மையாம்.

வாத்திய துவனியைக் கேட்டும், வாயில் புல்லுடனும், குதிரை கனைத்தால், யஜமானனுக்கு ஜயமுண்டாம்.

இளவயது, துரத்தப்பட்டது, கிழடு, பசியுள்ளது, தாகமுள்ளது, களைத்தது, தண்ணீர் குடித்தது ஆகிய குதிரைகளின் கனைப்பை எடுத்துக்கொள்ளக்கூடாது. (பயனில்லை என்று பொருள்.)

கொடியையும், சூரியனையும் கண்டு, குதிரை கனைத்தால் சண்டையில் யஜமானன் வெற்றி யடைவான்.

பிராணவாயுவானது தொப்புளிலிருந்து மேலே ஓடி மார்பு, கழுத்து, தலை இவைகளில் மோதுவதாலுண்டாகும் சத்தத்திற்கு "ஹேஷிதம்—கனைப்பு" என்று பெயர்.

குதிரையின் கனைப்பு, காக்கையின் சத்தம்போல் விட்டுவிட்டு இருந்தாலும், பன்றியின் உறுமல்போல் மெல்லியதாயிருந்தாலும், நரி ஊளையிடுவதுபோல் கொடூரமாயிருந்தாலும், கழுதை கத்துவதுபோல் தேய்ந்து கொடூரமாயிருந்தாலும், ஒட்டகையின் சத்தம்போல் மெல்லியதாய் அல்லது தேய்ந்திருந்தாலும், நல்லதன்று.

**கனைப்பின் பலன் முற்றிற்று.**

---

## குதிரையின் மணமும் பலனும்

---

குதிரைகளின் நவதுவாரங்கள், வியர்வை, சாணம் மூத்திரம், முகம், (மூக்குத்தண்டின் நடு). இவைகளின் மணமானது :—தாமரைமலர், நெய், சந்தணம், பால், தயிர், தேன், சம்பகமலர், திரிசைமலர், அகில்,

யானையின் மதஜலம், மருதை, வஸந்தகாலத்தில் பூக்கள் நிறைந்த வனங்கள், புன்னைப்பூ, அசோகமலர், ஜாதிமுல்லைமலர், ஸரஸம் (தேனுள்ள பூ), மருதாணிப் பூ, ஜாதிப்பத்திரி, மாம்பூ, தண்ணீர் தெளித்த பூமி, மகிழம்பூ இவைகளின் மணமுள்ள குதிரைகள் சுபமானவை. புத்திரன், செல்வம், ஸுகம், ஆனந்தம் இவைகளைக் கொடுக்கும். ஸந்தோஷத்தையுண்டு பண்ணும். மங்களகரமான இக்குதிரைகள் அரசர் களுக்கு வாகனங்களாம்.

நாய்மாம்ஸந் தின்னும் புலையன், ஆமை, மூட்டைப்பூச்சி ரத்தம், கழுதை, ஒட்டகம், பன்றி, கோட்டான், மலம், மூத்திரம், பூண்டு, மீன் முட்டை இவைகளின் நாற்றமுள்ள குதிரைகள் அசுபபலனைக் கொடுக்கும். அவைகளை நீக்கிவிட வேண்டும்.

## குதிரை சாயையும் பலனும்

---

ஆகாயத்திலிருக்கும் சூரியனை மேகம் மறைப்பது போல் குதிரையின் லக்ஷணங்களை மறைக்கும் நிழலுக்கு "சாயை" என்று பெயர். இந்த சாயை,—

பிருதிவீஜா, வாருணீ, ஸௌரீ, வாயவியா, நாபஸீ என ஐந்துவிதமாம்.

இவ்வைந்து விதங்களில் பிருதிவீஜா, வாருணீ, ஸௌரீ மூன்றும் நல்லவை. மற்ற இரண்டும் கெட்டவை.

ரம்மியமாய் ஒளியுடன், நிலைத்து, பற்பல நிறங்களில் கண்ணையும் மனதையும், கவரும் சாயைக்கு "பார்த்திவீ" என்று பெயர்.

நீருண்ட மேகம், தாமரைமலர், தெளிந்தநீர் இவைபோல் மனதைக் கவரும் நிலையான சாயைக்கு "வாருணீ" என்று பெயர்.

உதய சூரியன், அரக்கு, செம்பஞ்சுக் குழம்பு, பதுமராகமணி, தாமரைப்பூ இவைகளைப்போல் ஒளி பொருந்திய சாயைக்கு "ஆக்நேயீ" என்று பெயர்.

இம்மூன்றுவித சாயைகளும் போற்றத்தக்கவைகளாம்.

கொடூரமாகவோ, நிலையற்றோ, அருவருக்கக் கூடியதாகவோ இருக்கும் சாயைக்கு "வாயவியம்" என்றும் "நாபஸீ" என்றும் பெயர்.

இவ்விரண்டு சாயைகளும் அசுபமானவைகளாம்.

குதிரை குளிக்கும்பொழுதும் தண்ணீர் குடிக்கும்பொழுதும் தூங்கி எழும்பொழுதும் தீனி தின்னும்பொழுதும் குதிரையைப்பார்த்து சாயை அறியவேண்டும்.

## ஜயதத்தர் கூறும் சாயை இலக்கணம்

---

பல நிறங்களிலும் கவர்ச்சிகரமானது பிருதிவீ சாயை, பதுமராகம்போல் சிகப்பாயிருப்பது ஆக்நேயீ சாயை, சுத்தப்பளிங்குபோல் மனதைக்கவரக்கூடியது

வாருணீ சாயை, பயங்கரமாயும், ஒளியில்லாமலும் கொடூரமாயுமிருப்பது வாயவியசாயை என்றும், வாயவியசாயை கெட்டது என்றும், ஜயதத்தர் கூறியுள்ளார்.

## நடை இலக்கணம்

ஒரே சீராக எகிரிக்குதியாமல் கண்ணையும் மனதையும் கவரும் நடை ஏற்றது.

நொடி, குதி, எகிருதல் முதலிய நிலையற்ற நடை ஏற்றதல்ல.

மயில், கீரி, விருஷபம், ஒட்டகம், புலி, சிங்கம், யானை, ஸர்ப்பம், குரங்கு, மான் இவைகளைப் போன்ற உத்தமகதியுடைய குதிரை, அரசனுக்கு ஜயம், சுகம், செல்வம், இவைகளை விருத்தி செய்யும்.

## ஸத்துவ (தன்மை) இலக்கணம்

குதிரையின் குணம், சுத்தம், ராஜஸம், தாமஸம் என்று மூன்றுவிதம். இவைகளில் சுத்தம் ஏழு வகை, ராஜஸம் ஆறுவகை, தாமஸம் மூன்றுவகை எனக் கூறப்பட்டிருக்கிறது.

பிராம்ஹம் — பிராமணகுணம், ஆர்ஷம் — ரிஷி குணம், மாஹேந்திரம்—இந்திரன் குணம், யாமியம்—யமன் குணம், கௌபேரம்—குபேரன் குணம், வாருணம்—வருணன் குணம், காந்தர்வம்—கந்தர்வகுணம், என்ற ஏழு பிரிவுகளும் சுத்தஸத்துவத்தைச் சார்ந்தவைகளாம்.

ஆசுரம்—அசுரகுணம், ராட்சஸம்—ராட்சஸகுணம், பைசாசம் – பிசாசுகுணம், ஸார்ப்பம் – பாம்புகுணம், பைத்திரம் — பித்ருகுணம், சாகுனம் — பட்சியின் குணம் என்ற ஆறு பிரிவுகளும் ராஜஸமானவை களாம்.

பாசவம் — பசுகுணம், மாத்ஸியம் — மீனின் குணம், வைருதம் – பச்சிலைக்கொடியின் குணம் என்ற மூன்றும் தாமஸமானவைகளாம்.

இவைகளில் சுத்தஸத்துவபிரதானமான குதிரை உயர்தரமானதாம்.

ராஜஸஸத்துவமுள்ள குதிரை நடுத்தரமாம்.

தாமஸஸத்துவமுள்ளது கடைத்தரமாம்.

காமம், மறதி, கோபம், களங்கம் இவையில்லாமல் அடக்கமுள்ள குதிரை பிராம்ஹம்.

ஆசை, வெறுப்பு, மதம், மோகம் இவையில்லாதது ஆர்ஷம்.

வலிமையும் பெருமையுமுள்ளது ஐந்திரம்.

கபடம், ஆசை, மோகம் இவையில்லாதது யாமியம்.

வெளிப்படையான ஸந்தோஷம், கோபம், மறவாமை, காமம், இவையுள்ளது கௌபேரம்.

சௌரியம், சுகம், விளையாட்டு இவைகளில் ஆசையுள்ளது வாருணம்.

ஸங்கீதம், வாத்தியம், தெய்வவழிபாடு, (பூஜை), இவைகளில் ஆசையுள்ளது காந்தர்வம்.

திமிரும், கடுங்கோபமுமுள்ளது ஆஸுரம்.

ஆண்குறியை யடித்துக்கொள்ளுதல், பெருந்தீனி தின்னுதல், தூக்கத்திலாசை இவையுள்ளது ராக்ஷஸம்.

பயமுள்ளது ஆயினும் இரங்கத்தகாதது, பெருந் தீனி தின்பது ஆகிய குணமுள்ளது பைசாசம்.

சீக்கிரகோபம், பயம், சுத்தம் இவைகளுள்ளது ஸார்ப்பம்.

கெட்ட ஸ்வபாவம், உபசரிக்கமுடியாமை ஆகிய குணமுள்ளது பைத்திரம்.

எப்பொழுதும் தீனி தின்னுதல், கலவியிலாசை, புருவத்தை நெறித்தல் ஆகிய குணமுள்ளது சாகுனம்.

பசி, உணர்ச்சியின்மை அல்லது மந்தஸ்வபாவம், பயம், சோம்பல் இவையுள்ளது பாசவம்.

தீனியில் விருப்பம், பயந்த ஸ்வபாவம், நீரிலாசை இவையுள்ளது மாத்ஸ்யம்.

தூக்கம், சிந்தனை, சோம்பல் மிக்கது வைருதம்.

---

## முற்றும் தவிர்க்கவேண்டிய தோஷங்கள்

பற்கள் கருப்பாகவும், நொடியுற்றதாகவும், சிப்பியைப் போலவும், மேடுபள்ளமுள்ளதாகவும், குறைவுற்றதாகவும், ஒடிந்தும் இருக்கக்கூடாது. ஒரே அண்டம், மூன்று அண்டங்கள், தொங்கும் அண்டங்கள், இவையும் கூடாது. சவத்தைச் சுமப்பதும் சுட்ட தோலின் மணமுள்ளதும், பல குட்டிகள் போடுவதும் ஏற்றதல்ல. கொம்பு, மூன்று காது, இரட்டைக் குளம்பு, முலைக்காம்பு, ஐந்து குளம்புகள் இவையும் குற்றமுள்ளதாம். இப்படிப்பட்ட குதிரைகளை உடையவன் கொடிய தீங்குகளுக்கு இலக்காவான். கண்ணால் கண்டால் கூட, கதிரவனைக் கண்டு ஸ்னானம் செய்யவேண்டும். கொம்பிருந்தால் சுட்டுத் தீய்த்துவிடலாம். கெட்ட சுழிகள் இருந்தால் பழுக்கக் காய்ச்சிய தங்க ஊசியால் சுட்டுவிடலாம்.

## கன்னத்தின் நிறமும் பலனும்

குதிரைக்குட்டி கர்ப்பத்திலிருக்கும்பொழுது, பித்தபிரகோபமுண்டாவதால் குட்டியின் கன்னம் கருநிறமடைகிறது. கன்னத்தின் நிறங்களும், சுபாசுபபலன்களைக் கொடுக்கின்றன.

1. வெளுப்பு, 2. சிகப்பு, 3. மஞ்சள், 4. பச்சை, 5. கருப்பு, 6. சித்திரம், 7. அரை வெளுப்பு என்று கன்னத்தின் நிறம் எழுவிதமாம்.

குதிரையின் கன்னம் சிகப்பு நிறமாயிருப்பின் மேன்மையானது மற்றவை மேன்மையானதல்ல. தவிர்க்கவேண்டியவை.

## ஜாதிக் குதிரைகள்

1. காம்போஜம்
2. பாஹ்லீகம்
3. வநாயுஜம்
4. காந்தாரம்
5. ஆரட்டம்
6. வாஹேயம்
7. ஸைந்தவம்
8. தைத்திகம்
9. குலஜம்
10. உபகுலஜம்
11. மேசகம்
12. உபமேசகம்
13. கைவர்த்தம்
14. ஆர்ஜுநீயம்
15. பார்வதீயம்
16. யௌதேயம்
17. யாவனம்
18. ஹ்ரஸ்வயாவனம்
19. துஷாரம்
20. காதரேயம்
21. பார்வதீயம்
22. ஆவந்தீயம்
23. காச்மீரம்
24. ஸகாநநம்
25. பார்வதீயம்
26. உத்தரம்
27. மாத்ரேயம்
28. தாக்ஷிணேயம்
29. அந்தர்த்வீபம்
30. கைகேயம்
31. அம்பஷ்டம்
32. வாஸந்திகம்
33. ஸௌவீரம்
34. தாரதம்
35. ஸைரிகம்
36. கைராதம்
37. க்ஷுத்ரகைராதம்
38. மாளவம்
39. விந்தியகம்
40. காலிங்கம்
41. மாதுரம்
42. மானவம்

43. கௌஸல்யம்
44. அர்ஜுநேயம்
45. உபாவிருத்திகம்
46. ஸௌராஷ்ரம்
47. ஸாவித்ரம் (ஸௌவீரம்)
48. கௌரவேயம்
49. பாஞ்சாலம்
50. பௌண்ட்ரகம்
51. குக்குடம்
52. ஹ்ரஸ்வகுக்குடம்
53. ஹைமவதம்
54. மகதம்

என்று ஐம்பத்திநான்கு குலங்களாம். (இக் குலங்களுக்கே ஜாதி என்னும் பெயர் கொள்ளவேண்டும்.)

இவையன்றி வேறு ஒன்பது "கோட்கம்" என்ற குதிரைகளும் உண்டு.

1. மத்தம், 2. அவி, 3. காச்யம், 4. அச்மகேயம், 5. மாலிகம், 6. சுவேதவாகனம், 7. மேசகம், 8. சுவேதகிரிஜம், 9. வைதர்பம் என்று அவைகளின் பெயராம்.

இமயமலையின் தென்கிழக்கிலுள்ளவைகளுக்கும், பச்சைநிற முள்ளவைகளுக்கும் கோடகம் என்றே பெயர்.

### 1. காம்போஜம் :

நெற்றி, தோள், பிருஷ்டம், இவை பருத்து; முகமும் கழுத்தும் நீண்டு; மணிக்கட்டு, குளம்பு, குளம்புத்தண்டு, மாணி, அண்டம் இவை குட்டையாய்; துடை, முழங்கால், கணைக்கால் இவை உருண்டு திரண்டு அழகுடன் கம்பீரமாய் நீண்டு;

கண், தவளைக்கண்போல் உருண்டு திரண்டு பருத்து; குளம்பு அழுத்தமாய்; காது மேலே உயர்ந்து; மூக்கின்கீழ், கடைவாய் இவை பெரிதாய்; பாதங்கள் சம்புடம்போல் பதிந்து; வயிறு பருத்து; பிடரி, வால் இவைகளின் மயிர் மெல்லியதாய் மிருதுவாய் அமைந்து; நல்ல நிறத்துடன் நீளமில்லாமல் அழகான நடு முதுகு; நிமிர்ந்து உயர்ந்த முகம்; கருப்பாகவோ, விகாரமாகவோ இல்லாமல், வெளுப்பு அல்லது சிகப்பு நிறம்; கம்பீரமான தோற்றம்; ஸுகமளிக்கும் கம்பீரமான நடையுடன்கூடிய குதிரைகள் **காம்போஜங்கள்.**

## 2. பாஹ்லீகாசுவம் :

காம்போஜாசுவங்களைப் போன்ற அங்க அமைப்பு நிறமுடையவைகளாயினும், அகன்ற முதுகெலும்பு; அகன்று நீண்ட சரீரம்; கொஞ்சம் பெரிதான கண், நீண்ட கழுத்து, முதுகு, மார்பு, உடல், பல், மயிர் ஆகியவைகளுடன் தேன் அல்லது மஞ்சள் நிறமான கண் இவைகளுடன், கோபம் வந்தால் பற்களால் கடிக்கும் கெட்ட குணமுடையதாயினும், யஜமானனிடம் அன்பு உடையதாய், மிக்க பராக்கிரமம், மிக வேகமான ஓட்டம்.

## 3. வநாயுஜம் :

இலேசான உடல்; நடுத்தர உயரம்; சபல ஸ்வபாவம்; அழகிய கண்; முளையைப்போன்ற காது; சிறிய கழுதது, அண்டம், மாணி; பருத்த

கால்; அழுத்தமான குளம்புத்தண்டு; இடி, யானை பிரிடுதலுக்கு அஞ்சா நெஞ்சுரம்; சிங்கம்போல் கம்பீரமான தோற்றம்; தேரில் கட்டுக் கொள்ளாமை; மற்ற குதிரைகளை மிஞ்சிய வேகம்; காடுகள், மலை, அகழ் இவைகளுக்கு நடுவில் போக விரும்பாமை.

**4. காந்தாரம் :**

பலவித நிறமுள்ளது; கட்டமைந்த உடல்; நல்ல வலிமை; செழித்து உயர்ந்த முன்னுடல்; விஷமமான பின்னுடல்.

**5. ஆரட்டம் :**

பருத்த நெற்றிப்பொட்டு, கண் கூடு; அழகான பிருஷ்டபாகம்; நல்ல பலம்; ஒளி, வேகம்.

**6. ஸைந்தவம் :**

நீண்ட முகம்; கழுத்து, பருத்த உடல்; உதடு, கண், மெல்லிய தோல்; கடைவாய்; அகன்ற மார்பு; தொங்கிய அண்டம்; அழகிய மாணி.

**7. தைத்திஜம் :**

பருத்த முகவாய்க்கட்டை, கழுத்து, மாணி, அண்டம்; கனமாய், நீளமாய் பெருத்த உடல்; நல்ல வேகம்,

8. **குலஜம் :**

வட்டமான கழுத்து; கனமான மார்பகம்; சுமை தூக்கி வெகுதூரம் செல்லும் ஆற்றல்; நீண்ட முகம், வால்.

9. **உபகுலஜம் :**

குலஜங்களைக்காட்டிலும் சற்று நீளமான உடல்; மெல்லிய தோல், மயிர்; வட்டமான இடுப்பு, துடை.

10. **மேசகம் :**

நீண்ட கழுத்து; அகன்ற மார்பு; நல்ல உயரம்; பலவீனம்; அதிகதூரம் செல்லமுடியாமை; சுமை தூக்கும் வலு.

11. **உபமேசகம் :**

பரவிய திமில்; நடுத்தரமான மாணி; தலை, கழுத்து இவற்றில் சடையற்ற பிடரி.

12. **த்ரைகர்த்தம் :**

மெதுவான உடல்; அழகான பிடரி; அழகான குளம்புத்தண்டு; கொடிய முகம்; வெள்ளையான மேல் உதடு.

13. **யௌதேயம் :**

திடமான கால்கள்; வெள்ளை நிறம்; சுமை தாங்கும் வலிமை; வட்டமாய் நீண்டு கனமான கழுத்து.

14. **ஸாவித்திரேயம் :**

தெளிவான நீண்ட முகம்; திமிர்பிடித்த சுபாவம்; மெல்லிய ரோமங்கள்; எப்பொழுதும் கடைவாயில் புல்; பெரிய வயிறு; நீளமான தொடை, முதுகு; கெட்டியான மாமிசப்பற்று; நீண்ட மயிருள்ள வால்.

15. **யவனம் :**

அழகிய கண், கன்னம்; மெல்லிய தாடை; பெரிய கனமான மார்பு நெற்றி; குறுகிய சுலப நடை; நல்ல ஒளி; மெல்லிய தோல், மயிர்.

16. **தர்ஜிதம் :**

அமைப்பில் யவனங்களைப்போன்றவை; பித்தம் மிக்கவை; மதுவென்ற அரக்கனுல் விரட்டப்பட்டு கடல் தாண்டிச்சென்று யவனர்களுடன் சேர்ந்து கொண்டவை.

17. **அர்ஜுனம் :**

பெருத்த வயிறு; நீண்டு தொங்கும் அண்டங்கள்; வெண்மையான சுத்தமான முகம், கழுத்து; குறுகிய முதுகு.

18. **ஹ்ரஸ்வயாவனம் :**

யவன ஜாதியிலேயே குட்டையானவை; ஆனல் நல்ல வேகமுள்ளவை.

**19. துஷாரம் :**

பார்ப்பதற்கு அழகானவை; வீர்யம், வேகம் உள்ளவை; பெருத்த வயிறு, மார்பகம் கொண்டவை.

**20. காதரேயம் :**

பெருத்த பிருஷ்ட பாகம்; திடமான கால்கள்; மெல்லிய ரோமங்கள்.

**21. பார்வதீயம் :**

கனமான தோல்; வட்டமான உடலமைப்பு.

**22. ஆவந்தியம் :**

பின்பாகம் கரடுமுரடாயும், சிறிய வயிறுடனும், குறுகிய முதுகுடனும், பருத்த மார்பு, பிருஷ்ட பாகங்களுடனும் உள்ளது.

**23. காச்மீரம் :**

பருத்த முழங்கால்; திடமான பாதங்கள்; பெரிய வயிறு, மார்பு; பரந்த பிடரி; அழகிய குளம்புகள்.

**24. கானனம் :**

தெளிவான நீண்ட குறுகிய முகம்; முளை போன்ற காதுகள்; முன்புறம் நீண்டும், பின்புறம் உயர்ந்துமுள்ள உடல்,

25. **உஷ்டிரம் :**

நீண்ட கழுத்து ; ஒட்டகத்தைப்போன்ற உடலமைப்பு.

26. **பார்வதீயம் :**

பளபளப்பான பிடரி ; திடமான பாதங்கள் ; நல்ல வேகம் ; மிகுந்த பலம்.

இந்த இருபத்தாறு ஜாதிகளுக்கும் பொதுவாக "ஆஜாநேயங்கள்" எனப்பெயர். ஆஜானேயங்கள் எல்லாவற்றிலும் கீழ்க்கண்ட பொது குணங்களைக் காணலாம்: திடமான கால்கள், அழகான கண்கள், அழுத்தமான நிறம், குட்டையான அண்டங்கள், யுத்தத்தில் எஜமானனுடன் ஒத்துழைப்பு, நல்ல வேகம், ப்ராஹ்மம் முதலிய ஏழு நல்ல குணங்களில் ஒன்று; நீண்ட ஆயுள், நோயற்ற வாழ்வு, நல்ல பாகுபாடுடன் அமைந்த உடல் வனப்பு, நல்ல மணம், நல்ல குரல், கோபமின்மை, அம்புகள் எய்தினும் கலங்காத போக்கு, எஜமானன் ஏறியிருக்கும் வரை உயிர்விடாத தைரியம்.

காம்போஜ குலத்தில் பிறந்தவை வநாயுஜம், ஆரட்டஜம், பாஹ்லீகம்.

வநாயுஜ குலத்தில் பிறந்தவை காந்தாரங்கள்.

ஆரட்டஜ குலத்தில் பிறந்தவை வாஹேயங்கள்.

தைத்திஜ குலத்தில் பிறந்தவை தைத்திஜங்கள்.

## வயதறியும் வகை

குதிரைகளின் வயதை இரு முறைகளில் அறியலாம்: ஒன்று வெளிப்படையான அடையாளம், மற்றொன்று மறைந்திருக்கும் அடையாளம்.

**முதல் வயது :**

ஒரு மாதக் குதிரைக்குட்டிக்கு "**சாவம்**" என்று பெயர். இவைகளுக்கு பற்கள் சிறிதளவே முளைத்திருக்கும்.

பற்கள் நன்கு தெரிந்தால் இரண்டு மாதக் குட்டி.

நடுப்பற்கள் முளைத்திருந்தால் மூன்று மாதக் குட்டி.

நடுப்பற்கள் நன்கு கூடி, கடைவாய்ப் பற்கள் முளைத்திருந்தால் ஐந்து மாதக் குட்டி.

பற்களின் நுனிகள் நன்கு ஒரே அளவாய் ஒத்து, புகை நிறம் கலந்த வெண் சிகப்புக் கோடுகள் சிறிதாகவும் பெரிதாகவும், அல்லது தெரிந்தும் தெரியாமலும் காணப்பட்டால் கொஞ்சம் குறைய ஆறுமாதக் குட்டி.

பற்கள் நன்கு வளர்ந்து ஒத்திருந்தால் ஏழு மாதக் குட்டி.

முன்பற்களிரண்டும் வெண்மையாயிருந்தால் எட்டு மாதக் குட்டி.

கடைப்பற்கள் ஒத்திருந்தால் ஒன்பதுமாதக் குட்டி. இதற்கு "சிசு" என்று பெயர்.

**இரண்டு வயது முதல் ஐந்து வயது வரை :**

குதிரையின் முதல்வயதில் பற்கள் வெண்மையாயிருக்கும். இரண்டாம் வயதில் பற்கள் கஷாய வர்ணமாயிருக்கும். மூன்றும் வயதில் பற்கள் விழுந்து முளைத்திருக்கும். நான்காம் வயதில் நடுப்பற்கள் விழுந்து முளைத்திருக்கும்.

ஐந்தாம் வயதில் கடைவாய்ப்பற்களுள்பட எல்லா பற்களும் விழுந்து முளைத்திருக்கும். அப்பொழுது நல்ல வலிமை, நெய்நிறவர்ணப் பற்கள், நிறைந்த அண்டம், தித்திப்பற்கள், களங்கமற்று பிரகாசமாய் நிறைந்த அங்கங்கள், அழகிய ரோமங்கள், நல்ல சோபை, சகல காரியங்களையும் செய்யத் தக்க ஆற்றல் ஆகிய குணங்கள் நிரம்பி இருக்கும்.

அதன் பற்கள் குட்டையாயும், சமமாயும், மெல்லியதாயும், நுனி பருத்தும், பால் வெளுப்பு நிறமாயும், நெருக்கமாயும், அதிக உறுதியில்லாமலும் இருக்கும். இக்குதிரைக்கு "**கைசோரகம்**" என்று பெயர்.

பற்கள் அகன்று, நீண்டு, நெருக்கமாய், நுனி கூர்மையாய், வெண்மையாய், அழுத்தமாய், நடுவில் பகுக்கப்பட்டு, அடியில் பள்ளமாயுமிருந்தால் அந்தப் பற்கள் விழுந்து முளைத்தவைகளாம்.

**புள்ளிகள் :**

முதல் வயதில் பற்களிலும், (?) இரண்டு மூன்று வயதுகளில் நடுப்பற்களிலும், ஆருவது வயதுமுதல் எல்லாப் பற்களிலும் கருப்பு, பச்சை, வெளுப்பு, மங்கல் பழுப்பு, சங்கின் ஒட்டை, ஆட்டம் ஆகிய அடையாளங்களை அறியவேண்டும்.

சில குதிரைகள் இளமையில் கிழடுபோலவும், கிழடுகள் யௌவனமுள்ளவை போலவும், ஏமாற்றத்தை உண்டுபண்ணுகின்றன.

ஆகவே அவைகளின் வயதை குளம்பு, மயிர், தந்தம், செயல், பலம், காந்தி, சத்தம், கட்டமைப்பு, மலஜலம் பிரிதல் முதலிய அடையாளங்களால் அறிய வேண்டும்.

பற்களின் கோடுகள் நீண்டும் குறுக்காகவும், கருப்பு, ப்ச்சை முதலிய நிறங்கள் கொண்டிருக்கும்.

தயிர், பால் போன்றது வெளுப்பு நிறமாம். வெண் கடுகின் நிறம் **ஸிதா** எனப்படும். வரகு தானியத்தின் நிறத்திற்கு **காசா** என்று பெயர். **ஈயின்** நிறம் **மக்ஷிகா** எனப்படும். சங்கின் இதழ் போன்றது **சங்கம்** எனப்படும். பல் நடுவின் ஓட்டைக்கு **உலூகலம்** என்று பெயர். பல் அசைவதற்கு **ஆட்டம்** என்று பெயர்.

1. கருப்பு, 2. பச்சை, 3. வெளுப்பு, 4. காசா (பழுப்பு), 5. ஈ, 6. சங்கு, 7. உலூகலம்,

(உரலில் உள்ளதுபோல் நடுச்சுற்றுப்பள்ளம்) 8. ஆட்டம், 9. வீழ்ச்சி என பற்களின் நிலைமை ஒன்பது விதமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

**ஆறுவது வயது முதல்**
**முப்பத்திரண்டாவது வயது வரை:**

குதிரைகளில் 6, 7, 8 வயதுகளில் முறையே நடுப்பற்கள், பக்கத்துப் பற்கள், கடைப்பற்கள் இவைகள் கருக்கும்.

9, 10, 11-வது வயதுகளில் முறையே நடுப் பற்கள், பக்கத்துப்பற்கள், கடைப்பற்கள் இவை கள் பச்சை நிறமாம்.

12, 13, 14-வது வயதுகளில் முன் கூறிய முறை யில் பற்கள் வெளுக்கும்.

15, 16, 17-வது வயதுகளில் அவை முறையே பழுப்பு (கம்பு) நிறமாம்.

18, 19, 20-வது வயதுகளில் முறையே ஈயின் நிறமாம்.

21, 22, 23-வது வயதுகளில் முறையே சங்க வர்ணமாம்.

24, 25, 26-வது வயதுகளில் முறையே நடுவில் ஓட்டை உடையதாகும்.

27, 28, 29-வது வயதுகளில் முறையே ஆட்ட முள்ளதாகும்.

30, 31, 32-வது வயதுகளில் முறையே விழுந்து விடும்.

இவைகளை அறிவாளிகள் ஊக்கமாய்க் கவனித்து குதிரைகளின் வயதை அறிந்துகொள்ள வேண்டும்.

**புள்ளிகளுக்கு ஏற்ற உடலமைப்பு:**

கருப்புநிறப் பற்களுள்ள குதிரைகள்; ஸம்பூர்ண மான அங்கங்களுடன் கட்டமைந்த சரீரம், இடி, யானை பீருதல் போன்ற கம்பீரமான கனைப்பு, பலம், வலிமை, ஒளி, சாமர்த்தியம், வேகமான கதி, சந்தோஷம், பசி, தாகம், சுமை, குளிர், வெய்யில், காற்று இவைகளை ஸஹிக்கும் தன்மை, தெளிந்த இந்திரியம், மனது ஆகிய அடையாளங்களுள்ளவை களாம்.

பசுமைநிறப் பற்களுள்ள குதிரைகள்; அழுத்த மான சதைப்பற்று, நல்ல ஒளி, பலம், அழகு, பசி தாகம் பொறுத்தல், மேக கர்ஜனைபோல் கம்பீரமான கனைப்பு இவைகளுள்ளதாயிருக்கும்.

வெண்மைநிறப் பற்களையுடைய குதிரைகள்; பலம், வேகம், காந்தி, அழகு, தலையின் பக்கத்தில் சுலுக்கம், நெற்றியில் கிழத்தனத்தைக் காட்டும் வெளுப்பு இவைகளுள்ளதாம்.

பழுப்புநிறப் பற்களுள்ள குதிரைகள்; மாம்ஸ புஷ்டி, திமிர், வேகம் இவைகள் குறைந்தது. நரம்பு தெரிந்து, முழங்கால் பருத்து, வீரியமற்று விகாரமாய், நீண்ட முகம், பற்கள் இவைகளுள்ளதாயிருக்கும்.

ஈயின் வர்ணப் பற்களுள்ள குதிரைகள்; அங்கங்கள் காதுகள் தளர்ந்து, சுலுக்கமுற்று, பற்களிலும் உடலிலும் சக்தி குன்றி, உற்சாகமிழந்து, வேதனையடைந்து, இடுங்கிய கண்களை யுடையதாயிருக்கும்.

சங்கம்போன்ற (ஒரு பக்கம் பருமன் நடுவில் பள்ளம் மற்றொருபுறம் சிறுத்து) பற்களுள்ள குதிரைகள்; கம்பீரமான கண், மாம்சமற்றுச் சுருங்கிய உடல் இவைகளுள்ளதாம்.

நடுவில் ஓட்டை விழுந்த பற்கள் உள்ளது சந்தோஷம், கோபம் இரண்டுமற்றிருக்கும்.

ஆடிய பற்களுள்ள குதிரைகள் புல்லை மெதுவாகத் தின்னும்.

பற்கள் விழுந்த குதிரைகளுக்கு வயது முப்பத்திரண்டு எனக் கூறப்பட்டிருக்கிறது.

யானைக்கு வயது நூற்றிருபது, மனிதர்க்கு வயது நூறு, குதிரைக்கு வயது முப்பத்திரண்டு என கர்கர் கூறியுள்ளார்.

கொட்டடி (லாயம்) யிலிருந்து நடமாடும் குதிரைகளை அவைகளின் பலம், வலிமை இவைகளின் ஏற்றத் தாழ்வு இவைகளைக் கவனித்து பிறகு மற்ற அடையாளங்களைக் கவனிக்க வேண்டும்.

**பிலவம் முதலிய அடையாளம் புரியாத குதிரைகள்:**

பற்கள் விழுந்து முளைத்து கிசோரகாசுவம் (ஐந்து வயது) போலிருந்தால் அடையாளம் கொஞ்சமாகத் தெரியும். அதற்கு **பிலவம்** என்று பெயர்.

அது வெளுப்பாயிருந்தால் **ஸாரதந்தம்** என்றும், கூர்மையாயிருந்தால் **ஸம்ஸ்திதம்** என்றும் பெயர். இவை மெதுவாக குறைந்துபோம்.

கொட்டடியில் திரியும் ஸாரதந்தங்களுக்கு அந்த அடையாளங்கள் மூன்று வருஷம் இருக்கும். ஸார தந்தங்களுக்கு **சாரக்யம்** என்றும் பெயர். அவைக ளுக்கு நான்காவது வருஷத்தில் பற்கள் கலங்கிய நிற முள்ளதாயிருக்கும். ஏழாவது வயதில் பற்கள் கருக்கும்.

**வயது முறை:**

மனிதனுக்கு வயது நூறு. யானைக்கு வயது நூற்றிருபது. பசுவிற்கு வயது இருபத்திநான்கு. கழுதை, ஒட்டைக்கு வயது இருபத்தைந்து. நாயின் வயது பதினாறு. நரியின் வயது இருபத்தைந்து. புழுக் களுக்கு வயது ஏழு நாள். ஈக்களின் வயது பதினான்கு நாள். குதிரைக்கு வயது முப்பத்திரண்டு வருஷம் என்று சாலிஹோத்திரர் சொல்லியிருக்கிறார்.

## நிற இலக்கணம்

---

நிறம் பற்றி உள்ள குணதோஷங்கள் முன்பு "சித்திரவர்ணக் குதிரைகள்" என்ற அத்தியாயத்தில் கூறப்பட்டுவிட்டன. இவ்வத்தியாயத்தில் நிறத்திற் கேற்றபடி பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| சந்திரனின் குதிரை | — | வெளுப்பு. |
| இந்திரன் குதிரை | — | பச்சை. |
| யமன் குதிரை | — | கருப்பு. |
| விஷ்ணுவின் குதிரை | — | தாமரை நிறம். |
| சூரியனின் குதிரை | — | கிளிப்பச்சை. |
| அக்னியின் குதிரை | — | மஞ்சள். |
| வருணன் குதிரை | — | மேகநிறம். |
| குபேரன் குதிரை | — | நீலம். |

## அரசனுக்கேற்ற குதிரை

### தேவாசுவம்:

சிகப்பு, சாமை நிறம், கிளிப்பச்சை, பச்சையும் நீலமும் கலந்த நிறம் இந்த நிறங்களுடன் வைடூரியம் போன்ற கண்ணுடைய குதிரையும், உடல் முழுமையும் வேறு நிறமாயும், அதன் கால்கள் சிகப்பு, மஞ்சள், வெளுப்பாயும், அழகிய முகவாய்க்கட்டை, உயர்ந்த தாடை, தந்தங்கள் இவை சிகப்பாயும், மிகவும் சுத்தமாயும், நல்ல தைரியமுள்ளதுமான குதிரை "தேவாசுவமாம்". இதன் சப்தத்தைக் கேட்டு மற்றக் குதிரைகள் பயத்திலொடுங்கி வேதனையடையும்.

### புரோஹிதரின் குதிரை:

நீருண்ட மேகவர்ணம், வெண்ணிற மண்டலங்கள், வெண்மையான குளம்புகள், வெண்மையான கண்கள், பராக்கிரமம், தூய்மை, சிங்கம் யானைகளின்

சத்தும் இவைகளுடன், தாமரை மலர்போன்ற முகம், சுபமான மணம், திறமை, பொறுமை, ஸத்துவ குணம், நல்ல சுழிகள், சகல கதிகளையு மறிந்த குதிரை "புரோதாசுவமாம்".

**ராஜாசுவம் :**

வெளுப்பு, கருப்பு, சிகப்பு, மஞ்சள், சித்திரம் இந்த நிறமுள்ளதாய்; மங்களகரமான முகம், உதடு, முகவாய்க்கட்டை, பல், ரம்யமான கண், வால், மயிர், கட்டுக்கோப்பான அங்கங்களால் அழகான சரீரம்; குற்றமற்ற சுபமான அங்கங்கள்; மங்கள கரமான சுழிகள்; சுபமான நெற்றிச்சுட்டி ஆகிய அங்கலக்ஷணங்களுள்ளதாய்; ரோகம், தோஷம், கொடுமை, பயம் ஆகிய குறைகளில்லாமல்; வாஸனு திரவியங்களில் பிரியம், யௌவன வயது, பொறுமை, நல்ல அறிவு, நல்ல மணம், நல்ல பலம், நல்ல ஒளி, சிறந்த வலிமை, சிறந்த பராக்கிரமம், மங்கள கரமான நடை, சிறந்த வேகம் ஆகிய உத்தம குணங்களுடன் கூடி சிறந்த குதிரைகளுக்குத் தலைமை தாங்குவது "ராஜாசுவம்" அதை அன்புடன் போஷித்து பெருமையுடன் பரிபாலனம் செய்துவர வேண்டும்.

**பரமாசுவம் :**

ராஜாசுவததிற்குக் கூறிய உத்தம குணங்கள், லக்ஷணங்கள் உடையதாயும், பாலசூரியன், பூர்ண சந்திரனைப்போன்ற சிகப்பு வெளுப்பு இரு நிறங்களு

முடையதாய், சகல லக்ஷண குணங்களாலும் கண்ணைக் கவர்ந்து, மனமகிழ்ச்சி யளிக்கும், ஸர்வதேவதா ஸ்வரூபமான உத்தமமான குதிரைக்கு "பரமாசுவம்" என்று பெயர்.

இதன் முகத்தில் பிரம்மாவும், கண்ணில் சூரியனும், காதில் நாகராஜனும், நெற்றியில் சந்திரனும், இடநாசியில் நைருதியும், புஜங்களில் அச்விநீதேவர்களும், கனையில் மேகமும், கழுத்தில் வாயுவும், உடம்பு, மார்புகளில் மஹாவிஷ்ணுவும் வசிக்கிறார்கள்.

இக்குதிரை தேவர்கள் போரில் வெற்றிபெற வேண்டி உண்டானதாம். இது மிகப் புண்ணியமானது அரசர்களுக்குச் சிறந்த பலமானது. இதை அறிந்து பூஜிப்பவன் இந்திரனைப்போல் அகண்ட பூமண்டலாதிபதி யாவான்.

ஆபிஷேசநிகம்:

முத்து, சங்கு, பனி, சந்திரன் இவைகளின் நிறம்; முகம், உதடு, பற்கள், முகவாய்க்கட்டை இவை மங்களகரமாயமைந்து, பருத்த சரீரம்; சுபமான சுழிகள், அதிக பலம், நல்ல வலிமை, சிறந்த பராக்கிரமம், நல்ல ஸ்வபாவம், தூய்மை, அடக்கம், சந்தோஷம், அழகு, மனதை மகிழ்விக்கும் காம்பீர்யம், யுவராஜனுக்குகந்த குணம், இத்தகைய லக்ஷணங்களும் குணங்களுமுள்ள குதிரை, பட்டாபிஷேகத்திற்குரிய குதிரை.

**க்ஷத்ரியாசுவம் :**

வெண்மை அல்லது சிகப்பு அல்லது கருப்பு அல்லது மஞ்சள் ஆகிய நிறங்களுடன், மனதுக்கு இன்பமளிக்கத்தக்கதாய், சிங்கம் யானைபோன்ற நடை, நன்கு அமைந்த அங்கங்கள், களங்கமற்ற முகம், மனதைக்கவரும் ரம்யமான ரோமங்களுடன் கூடிய குற்றமற்ற குதிரை "க்ஷத்திரியாசுவமாம்".

**ஸாந்நாஹ்யம் :**

அடக்கம், வீரம், சிறந்த அறிவு, நல்ல ஒளி, சுபமான நெற்றிச்சுட்டி, நறுமணம் இவைகளுள்ள வைசியஜாதிக் குதிரையைப் போருக்குறிய குதிரை யாகக் கொள்ளவேண்டும்.

**ஔபவாஹ்யம் :**

பலவித வர்ணங்களுடன் அழுத்தமான கால்கள், அழகிய முதுகு, சுகமாய் சுமக்கும் தன்மை, சௌரியம், அடக்கம், நல்ல தன்மை, மங்களகரமான நடை, எல்லாக் குதிரைகளையும் மிஞ்சிய வேகம், பயமில்லாமை, ஸந்தோஷம், சுறுசுறுப்பு, வசீகரமான தோற்றம் ஆகிய குணங்களுடன் போர்க் குதிரையின் குணங்களுள்ள குதிரையைச் சவாரி செய்வதற்குற்றதாகக் கொள்ளவேண்டும்.

**மந்திரியின் குதிரை :**

வெளுப்பு, சிகப்பு, கருப்பு, பச்சை ஆகிய நிறம், சுபமான சாயை, பொறுமை, யௌவனம் இவை யுள்ள குதிரை மந்திரிக்கேற்றது.

**நந்திமுகம் :**

தலை முதலிய அங்கங்கள் யானையின் மஸ்தகம் போல் நன்கு அமைந்திருக்கும் குதிரைக்கு "நந்தி முகம்" என்று பெயர். இது ஸர்வகார்ய ஸித்தியையும் கொடுக்கும்.

குதிரை எந்த நிறமானாலும், அதன் காது கருப்பாயும், மயிர் வெளுப்பாயும், நெற்றிச்சுட்டி பனிநிறமாகவு மிருந்தால் அக்குதிரைக்கு **சியாமகர்ணம்** என்று பெயர்.

இத்தகைய உத்தம லக்ஷணமுடைய குதிரை ராஜாசுவமாம். இது இருக்குமிடத்தில், பயிர்கள் செழுமையாயிருக்கும், உற்பாதங்கள் உண்டாகா. காலத்தில் மழை பெய்யும். யௌவனபருவமுடையவர்கள் சந்தோஷமாயிருப்பார்கள். வயோதிகர்கள் ஜீவித்திருப்பார்கள். குதிரைகள் நோயற்றிருக்கும். ஆகையால் இத்தகைய உத்தமாசுவங்கள் தன் தேசத்திற்கு வந்தால், அரசர்கள், சந்தணம் பூ இவைகளால் பூஜிக்கவேண்டும்.

## ஆயுள்

---

நல்ல உயரம், குட்டையான காது, வெறுப்பையளிக்காத குரல், கண், ஸ்வபாவம்; பருத்த மூக்கு, பருத்த உடம்பு, அகண்ட மார்பு, அழகான அங்கங்கள்; காதை அழுத்தினால் சிந்தூரம்போல் சிவப்பது இம்மாதிரியான குதிரைகள் பூர்ணாயுளுடன் வாழும்.

ஆகாயத்தை முகருதல், தின்னும் புல்லை உதரி எரியும் ஸ்வபாவம்; அழுத்தமான உடல், முன் கால்களின் நடுவேயுள்ள முண்டில் வடு, நன்கு அமைந்த அழகிய மார்பு; தாமரை யிதழ்போன்ற நுனி நாக்கு, முத்துகள் போன்ற பற்கள், அழுக்கற்ற அண்டம், அடிக்கடி வாலை ஆட்டுதல், உறிஞ்சுதல், நறுமணமுள்ள வியர்வை, பளிங்குபோன்ற குளம்பு நுனி, நீண்ட உடல்; நீண்ட மூகுத்தண்டு, அண்ட ரேகையுள்ள குதிரைகள் நீண்ட ஆயுள் உள்ளது.

குடை, சாமரம், கிண்டி, கத்தி, அங்குசம், சத்தி, வஜ்ரம், கதை, துவஜம் இவைபோன்ற ரேகைகள், மூக்குத்தண்டிலிருந்து அது இடதுபுறம் சாய்ந்தாவது குட்டையாகவாவது இருந்தால், அக்குதிரை வெகு காலம் ஜீவித்திருக்காது. [எனவே மேற்கூறிய ரேகைகள் நேராக இருந்தாலும் வலது புறம் சாய்ந்து அல்லது இறங்கியிருந்தாலும் அக்குதிரை நீண்ட காலம் ஜீவித்திருக்கும் எனக் கொள்ளலாம்.]

மேலுதட்டின் மேலே ஸ்ரீவிருக்ஷம், ஸ்வஸ்திகம் என்ற லக்ஷணமுள்ள குதிரைகள் வெகுகாலம் ஜீவித்திருககும்.

மூக்கு நுனிக்கு மேலே நேர்க்கோடுகள் இருந்தால் அக்குதிரை பத்தாவது வயதில் இறந்துபோம்.

அக்கோடுகள் ஒரு அங்குல நீளமிருந்தால், பன்னி ரண்டு வயது ஜீவித்திருக்கும்.

அவை நான்கு அங்குல நீளமிருந்தால், பதின்மூன்று வருஷம் பிழைத்திருக்கும்.

அக்கோடு இரண்டாய், குறுக்காகவோ, மேலே போகக்கூடியதாகவோ இருந்தால் அக்குதிரை பதிஞன்கு வயது பிழைத்திருக்கும்.

எப்பொழுதும் வலது புறத்தைச் சார்ந்து படுத்துக்கொள்ளும் குதிரைகள் வெகுகாலம் ஜீவித்திருக்கும்.

முன்னுடல், அடிவயிறு, கணைக்கால் இவை வணங்கி, கண் கூடுகள் வறண்டு, கண்கள் சோர்வுற்றிருக்கும் குதிரைகள் அல்பாயுள் உள்ளவையாம்.

## குதிரை உணர்த்தும் பெரும் கேடுகள்

குதிரை உடலிலிருந்து நல்ல தணலிலிருந்து கிளம்பும் ஜ்வாலைபோல் சிலசமயம் ஒளி எழுப்பும். அந்தக் குதிரையின் எல்லா அங்கங்களும் (உடம்பு முழுமையும்) நெருப்புபோல் ஜ்வலித்துக்கொண்டிருந்தால், ஒரு வருஷகாலம் மழை பெய்யாது.

இத்தகைய ஜ்வாலை மூத்திரகோசத்திலிருந்து மட்டும் கிளம்பினுல் நகரத்திற்கு நாசமும், வயிற்றிலிருந்து கிளம்பினுல் பொருள் நாசமும், குதம், வால்களிலிருந்து கிளம்பினுல் தோல்வியும், தலை, வாய், அல்லது முகம், மூக்குத்தண்டு இவைகளிலிருந்தால் துக்கமும், கண்களிலிருந்தால் யஜமானனுக்கு பயமும் உண்டாகும்.

நெற்றி, முன்கால், மார்பு இவைகளில் புகைவது போல் காணப்பட்டால் அது வெறுக்கத் தக்கதாம்.

நெற்றி, முன்கால், மார்புகளில் ஜ்வலிப்பு காணப் பட்டால் நல்லதாம்.

வியாதியில்லாத குதிரை மனம் வருந்தி, இறை யெடுக்காமல், தண்ணீர் குடிக்காமல் இருந்தால், யஜமானனுக்குத் தீமை உண்டாம்.

குதிரை ஸ்வபாவமாய் முகத்தை ஆட்டி, உதடு களை சிணுக்கிக்கொண்டால், யஜமானனுக்கு வெற்றி யுண்டாம் என காவியங்களில் கவிகள் கூறி யிருக்கிறார்கள்.

குதிரை இடது காலால் (பூமியை) அடித்தால் யஜமானன் பிரயாணத்தைத் தடை செய்வதாம்.

குதிரையிலேறியவுடன், அக்குதிரை வலது புறதைத் திருப்பி யஜமானனைப் பார்த்தால், யஜ மானனுக்கு வெற்றி யுண்டாம்.

காரணமின்றி குதிரையின் பல் விழுந்தால், யஜமானனுக்கு பீதியுண்டாம்.

குதிரை இடது பக்கம் வாலை அசைத்தால் (அல்லது வீசினல்) தேசாந்திர யாத்திரையும், வலது பக்கம் அசைத்தால், வெற்றியு முண்டாகும்.

# குதிரைகளைப் பழக்கும் விதம்

குதிரைகளுக்கு நயமே தெரியாது. அவைகளை வலிமையாலே பழக்கவேண்டும். ஸாமம், தானம், தண்டம் என்ற மூன்று உபாயங்களையும் உபயோகிக்கவேண்டும். பழக்கும்பொருட்டு குதிரைகளின் குணத்தை அறிந்து அவைகளை நான்கு விதங்களாகப் பிரிக்கலாம். அப்பிரிவு, பழக்குவதற்கு சௌகரியமாக உலகவழக்கத்தில் உள்ள பிரிவு முறையைக் கொண்டு சொல்லப்பட்டிருக்கிறது.

பயம், பேராசை, பசி இவைகளுள்ள குதிரை "பிராமணம்" எனப்படும்.

சௌரியமும், ஆழ்ந்த கோபமும் உடைய குதிரை "க்ஷத்திரியம்".

பாபச்செயல், போலி உருவம், துஷ்டச்செயல் இவைகளுள்ள குதிரை "வைசியம்".

விகாரரூபம், நேர்மையின்மை, கொடுமை இவைகளுடைய குதிரை "சூத்திரம்".

பிராமணக் குதிரையை (விருப்பமான) பண்டங்களைக் கொடுத்தும், க்ஷத்திரியக்குதிரையை நயத்தாலும், வைசியக்குதிரையை தண்டோபாயம், அதட்டல்களாலும், சூத்திரக் குதிரையை தண்டோபாயத்தாலும் பழக்கவேண்டும்.

பிராமணக் குதிரையை விடியுமுன்னும், க்ஷத்திரியக் குதிரையை யாமத்திற்குள்ளும், வைசியக்

குதிரையை ஸந்தியா காலத்திலும், சூத்திரக் குதிரையை இரவிலும் பழக்கவேண்டும்.

உத்தமம், மத்திமம், அதமம் என்று குதிரைகளின் குணம் (அல்லது ஸ்வபாவம்) மூன்றுவிதம்.

உத்தமாசுவததை நயந்து கண்டிப்பதாலும் மத்தியமாசுவத்தை அடித்தும், அதமாசுவத்தை அதட்டல், தண்டோபாயம் இவைகளாலும் பழக்க வேண்டும்.

குதிரைகளைப் பழக்குமிடம் ஈரமாக இல்லாமலும், கருங்கல், ஜலம், புற்பூண்டுகள், கட்டைகள் முளைகள் இல்லாததாயு மிருக்கவேண்டும்.

ஜனநடமாட்டமில்லாத விஸ்தாரமான தனி இடத்தில் கொஞ்சம் புழுதியுள்ள பூமியாகச் செய்து கொள்ளவேண்டும்.

பருத்த சரீரமுள்ளவன், கோபமுள்ளவன், முட்டாள், மனக்கிளர்ச்சியுள்ளவன், காரணமின்றி அடிப்பவன் இவர்களுக்கு குதிரை அடங்காது.

குதிரையின் முதுகில் உட்கார்ந்து நடுங்குகிறவன், முதுகில் அடிப்பவன் இவர்களுக்குக் குதிரை அடங்கி ஓடாது.

குதிரைமீது ஊன்றி உட்காருகிறவன், குதிரையின் தத்துவம் (உண்மைநிலை, ஸ்வபாவம்) அறிந்தவன் அழுத்தமான பிடிப்புள்ளவன், சோம்பலில்லாதவன்

(ஏமாருதவன்), வைராக்கியம் அடையாதவன், உறுதியான சரீரமுள்ளவன் ஆகியவர்கள் குதிரையி லேறி சவாரி செய்யும் ஆற்றலுள்ளவர்களாவார்கள்.

சுருங்கச்சொன்னுல், குதிரையின் மனமறியாத வன் தடிகொண்டடித்தாலும் அது அவனுக்கு அடங்கி அவனைச் சுமந்து ஓடாது.

கனைத்தல், இடருதல், பயப்படுதல், வழி தவறிச் செல்லுதல், கோபமடைதல், பிரமித்தல், (பிரமித்து நின்றுவிடுதல்) ஆகிய ஆறு சமயங்களில் குதிரைகளை அடிக்கவேண்டும்.

கனைத்தல், (இடரி) இரு முழங்கால்களையும் மண்டியிட்டுச்சென்ருல், தலையிலும் தட்டவேண்டும் (அடிக்கவேண்டும்). கோபமடைந்தால் மார்பில் அடிக்கவேண்டும். பிரமித்து நின்ருல் வயிற்றில் அடிக்கவேண்டும். வழிதவறிச் சென்ருல் முகத்தில் அடிக்கவேண்டும்.

இடந்தவறி மற்ற இடத்திலோ, அகாரண மாகவோ குதிரையை அடித்தால், அக்குதிரை உயிருள்ளளவும் அடங்கி ஓடாது. அக்குற்றத்தை யும் விடாது.

## குதிரைகளின் நடை

1. விக்ரமா, 2. புலகா, 3. பூர்ணகண்டீ, 4. துவரிதா, 5. நிராலம்பா என குதிரைகளின் கதிகள் (நடை) ஐந்து விதம். ஆருவது கதியைக் கேள்விப்பட்டிருக்கிருேம், பார்த்ததில்லை.

சாதாரண நடைக்கு "விக்கிரமா" என்றும்; நாலுகால் பாய்ச்சலுக்கு "புலகா" என்றும்; முகம், கால்கள் முன்னேறி நடுத்தரமாய்ச் செல்லுத லுக்கு "பூர்ணகண்டீ" என்றும்; தன் மனம்போல் ஓடுவதற்கு "துவரிதா" என்றும்; அடித்தவுடன் ஓடுவதற்கு "நிராலம்பா" என்றும் பெயர்.

## குதிரை ஏற்றம்

குதிரையிலேறியவன் அதன் காது நடுவைப் பார்த்து அதன் மனதை யறியவேண்டும். மெதுவாக ஓட்டவேண்டும். குழந்தைபோல் உட்காரவேண்டும். சாய்ந்தோ. நன்கு நிமிர்ந்தோ, கூனியோ, கீழே பார்த்துக்கொண்டோ, உடம்பு அசையாமலோ உட்காரக்கூடாது.

அழுத்தமான துடை, அழுத்தமான பாதம், நீண்ட கழுத்து இவைகளுடையவனாய், முதலில் வலது காலை வைத்து ஏறுகிறவனே குதிரை சவாரி செய்யத் தகுந்தவனாவான். மற்றவர்கள் பாரத்தைக் கொடுப்பவர்களேயாவார்கள்.

சுக்லபக்ஷத்தில் பிரதமை, திரயோதசி, நவமி இந்த திதிகளில்; திருதி, ஸித்தி முதலிய யோகங் களில்; ஞாயிறு, திங்கள் கிழமைகளில்; மூலம், ரோகிணி, ஹஸ்தம், புஷ்யம், உத்திரம், உத்திராடம் உத்திரட்டாதி ஆகிய நக்ஷத்திரங்களில் குதிரையி லேறிப் பழகவேண்டும்.

காலையில் ஸ்நாநம் செய்து நல்ல ஆடையோடு சிகப்பு வஸ்திரம், சிகப்பு பூ தரித்து சவாரிசெய்யு

